Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone. 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS (O) P.P. 55

**என் ஆசை**

ஏழைகளுக்கு சேவை செய்வதே என் ஆசை. அதனால்தான் அவர்களுள் ஒருவனாக என்னை நான் ஆக்கிக் கொள்ள முடிந்தது.


-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**சிறப்பு**

உள்ளதைப் பங்கிட்டு உண்பது, உழைப்பையும் பங்கிட்டுச்செய்வது என்ற நிலையே சிறப்பானது.

-தந்தை பெரியார்

மலர்: 8 சென்னை 27-8-1984 திங்கள் ** வெளியீடு: 28-8-1984 செவ்வாய் இதழ் 311

கருணாநிதிகட்சியின்கொலைவெறிதொடர்கிறது

## தஞ்சை மாவட்டம் - மயிலாடுதுறையில்

# கழகத்தோழர் படுகொலை

### தி. மு. க. காலிகள் அரிவாளால் வெட்டிக் கொன்ற கொடுமை

**மயிலாடுதுறை. ஆக. 27- தஞ்சை மாவட்டம் - மயிலாடுதுறை பகுதியைச் சேர்ந்த கழகத் தோழர் முனுசாமி தி. மு. க. குண்டர்களின் கொலை வெறிக்கு ஆளாகி உள்ளார். தி. மு. க. காலிகள் அவரை அரிவாளால் வெட்டிக் கொன்றனர்.**

தமிழ்நாட்டில் 4 சட்டசபை தொகுதிகளில் இடைத் தேர்தல் தொடங்கியதில் இருந்து தி. மு. க. வினர் வன்முறை வெறியாட்டம் நாளுக்கு நாள் தலைவிரித்தாடி வருகிறது.

எல்லா இடங்களிலும் திமுக குண்டர்களால் கழகத் தோழர்கள் காரணமின்றி தாக்கப்பட்டு வருகின்றனர்.

கழகத் தோழர்கள் கொலையுண்டு வருகின்றனர்.

தமிழ் நாட்டில் மற்றோர் பஞ்சாப் உருவாகும் என்று கருணாநிதி பேசி வன்முறையை ஊக்குவித்தது தெரிந்ததே

அதைத் தொடர்ந்து திமுகவினரால் அராஜகம் வன்முறைகள் தொடர்கதை ஆகிவருகின்றன.

இடைத் தேர்தலின் போதே மயிலாடுதுறையில் திமுகவினர் வன்முறை வெறியாட்டம் நடத்தி கழக வெற்றி வாய்ப்பை தடுத்தனர்.

திமுக பெரும்புள்ளிகளின் கார்களில் இருந்து பெரும் அளவில் ஆயுதங்கள் தேர்தலின்போதுபறிமுதல் செய்யப்பட்டது. திமுக பெரும்புள்ளிகளும் கைதானார்கள்.

### தொடர்ந்து வன்முறை

அந்த இடைத் தேர்தலைத் தொடர்ந்து மயிலாடுதுறையில் திமுகவினர் தொகுதிமுழுவதும் வன்முறை செயல்களில் ஈடுபட்டு வருகின்றனர்.

மயிலாடுதுறை வாக்குப்பதிவு நடக்குமுன்பு கழக எம். எல் ஏக்களை ரோடில்இழுத்துப்போட்டு தாக்கினார்கள்

இப்படிப்பட்ட வன்முறை கொலை வெறிக்கு திமுக தலைமை தூபம் போட்டு வருகிறது

அண்மையில் நன்னிலம் நடராசன் என்ற திமுக பேச்சாளர் ஒருவர் மயிலாடுதுறை வந்து சாக்கடை மொழியில் பேசினாராம்.

முதல்வர் புரட்சித் தலைவரையும் கழகத் தலைவர்களையும் வாயில்வந்தபடி வசை பாடினாராம்

இந்த பேச்சின் தொடர்பாக அந்தப் பகுதி மக்களிடையே பெரும் கொதிப்பு ஏற்பட்டது.

இதைச் சாக்காகக் கொண்டு திமுகவினர் கழகத் தோழர்கள்மீது தாக்குதலை தீவிரப்படுத்தினர்.

மயிலாடுதுறைதொகுதியில் நல்லாத்தங்குடிஎன்ற ஊர் உள்ளது அந்த ஊரில் கழகத் தோழர் முனுசாமி கழகத்திற்காக பம்பரமாக செயல்பட்டு வந்தார்

அந்த 30 வயது இளஞ்சிங்கம் புரட்சித்தலைவர் மீது உயிரையே வைத்திருப்பவர் கழகம் துவக்கப்பட்ட காலத்தில் இருந்து கழகத்திற்கு ஓயாது உழைத்து வந்த உத்தமத் தோழர்

திமுக பேச்சாளரது நரகல் நடைப் பேச்சுக்கு எதிர்ப்பு முனுசாமியால் கிளப்பி விடப்படுகிறது என்று திமுகவினர்கருதி அவரை தீர்த்துக்கட்ட திட்டமிட்டனர்.

கடந்த 24ம் தேதி இரவு முனுசாமி அவரது வீட்டில் உறங்கிக் கொண்டு இருந்தார்.

அப்போது திமுக.வைச் சேர்ந்த மணி என்பவரும் மற்றவர்களும் அவரது வீட்டில்புகுந்துமுனுசாமியை எழுப்பி அரிவாளால் கண்டபடி வெட்டித் தள்ளினர்

முனுசாமி ரத்த வெள்ளத்தில் மிதந்தார். பிறகு அக்கம்பக்கத்தவர் வரவே திமுக குண்டர்கள் ஓடிவிட்டதாக கூறப்படுகிறது,

### ரத்த வெள்ளத்தில்

ரத்த வெள்ளத்தில் மிதந்த முனுசாமி மயிலாடுதுறை மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டு பிறகு தஞ்சை தலைமை மருத்துவ மனைக்கு கொண்டு செல்லப்பட்டார் நேற்றுஇரவு அவர் மரணம் அடைந்தார்.

முனுசாமிமரணம்பற்றிய செய்தி அறிந்ததும் கழகத் தோழர்கள் தஞ்சை விரைந்தனர்

தம்பி பாலவேலாயுதமும்மற்றவர்களும்தஞ்சை விரைந்தனர்

மரணம் அடைந்த முனுசாமியின் உடல் இன்று நல்லாத்தங்குடிக்கு கொண்டு வரப்படுகிறது

கழகத் தோழர்கள் பெரும் அளவில் கூடி இறுதிச்சடங்கிற்கு ஏற்பாடு செய்துள்ளனர்

---

பால் கமிஷன்

அறிக்கை திருட்டு:

## கருணாநிதி மீதான வழக்கு விசாரணை ஒத்திவைப்பு

சென்னை, ஆக. 27— பால்கமிஷன் அறிக்கை திருடப்பட்டு வெளியிடப்பட்டது தொடர்பான வழக்கு விசாரணை இன்று (27ந் தேதி) தலைமை மெட்ரோபாலிடன்மாஜிஸ்டிரேட் ஆர். மாணிக்கம் முன்பு விசாரணைக்கு வந்தது.

இந்த வழக்கில் குற்றம் சாட்டப்பட்டகருணாநிதி உட்பட நான்கு பேரும விசாரணைக்கு வரவில்லை இதையடுத்து வழக்கு விசாரணை செப்டம்பர் மாதம் 29ந்தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டது. அரசுவழக்கறிஞர் பத்மினி ஜேசுதுரை ஆஜரானார்.

**

விசாகப்பட்டினம் அருகே

## நடுக்கடலில் தீப்பற்றிய கப்பல்

விசாகப்பட்டினம், ஆக. 27— விசாகப்பட்டினத்திலிருந்து ரங்கூன்நோக்கி பயணமாகிக் கொண்டிருந்த வியாபாரக்கப்பல் ஒன்று நடுக்கடலில் திடீர் என்று தீப்பற்றி எரிந்தது கப்பலில் இருந்த பாகிஸ்தானை சேர்ந்த 14 பேர் மற்றும் 10 கிரேக்கர்கள் உள்ளிட்ட கப்பல்அதிகாரிகள் இந்திய கப்பற்படையினரால் காப்பாற்றப்பட்டனர். இந்த தீவிபத்து கடந்த சனியன்று நடந்தது. ஞாயிறு காலை தீ அணைக்கப்பட்டதாக ஒரு தகவல் கூறுகிறது.

இந்திய கப்பல்படையை சேர்ந்த மகாங் என்ற கப்பல் சென்று தீபிடித்த கப்பலில் எரிந்த தீயை அணைத்தது. மேலும்ஒரு கப்பலும் பாதுகாப்பு நடவடிக்கைகளுக்காக அனுப்பப்பட்டுள்ளது.

**

பொற்கோயில்

சுற்றுப்புறப் பகுதியை

## அழகுபடுத்த ரூ. 56 கோடி திட்டம்

அமிர்தசரஸ், ஆக 27- அமிர்தசரசில் உள்ள பொற்கோவிலின் சுற்றுப்புறத்தை அழகுபடுத்த பஞ்சாப் மாநில அரசு 56 கோடி ரூபாய் செலவிடவிருக்கிறது.

இதற்கான திட்டம் மத்திய அரசின் அனுமதி கோரி டெல்லிக்கு அனுப்பப்பட்டுள்ளது இன்னும் 15 நாட்களுக்குள் மத்திய அரசு இத் திட்டத்துக்கு அனுமதி வழங்கிவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

பஞ்சாப் மாநில அரசு தலைமைச் செயலாளர் எஸ்.எஸ் தண்டா அமிர்தசரசில் நிருபர்களிடம் இத்தகவலைக் கூறினார்.

மத்திய அரசின் அனுமதி கிடைக்கப் பெற்றதும் ஒரு ஆண்டு காலத்துக்குள் இந்தஅழகு படுத்தும் திட்டம் பூர்த்தியாகிவிடும் என்றும் அவர் கூறினார்,

---

## இருதய நோய்க்கு கைகண்ட மருந்து யோகாசனம் தான்

பம்பாய், ஆக. 27— இருதய நோய்க்கு சிகிச்சை அளிப்பதில லட்சக்கணக்கான ரூபாய் செலழிக்கப்படுகிறது அல்லவா? இப்படி செலவழிக்கவேண்டாம். யோகாசனம் மூலம் மாரடைப்பு இருதய நோய்களை எளிதில் சுகப்படுத்தலாம் என்கிறார்கள் பிரபலஇருதய நோய் மருத்துவ நிபுணர்கள.

இருதய நோய் வராமல் தடுப்பது எப்படி என்பது பற்றி பம்பாயில் உள்ள ஜேஜே. குருப் மருத்துவமனைகளைச் சேர்ந்த பேராசிரியர் டாக்டர் அச்சாக்தலைமையில்மருத்துவ நிபுணர்கள குழு ஒரு ஆராட்சியையேநடத்தியது.பின்னர் அந்த நிபுணர் குழு பிரபல பிரமுகர்கள் சிலரையும் அழைத்து இருதய நோய்பற்றி அவர்களது கருத்துக்களையும் கேட்டறிந்தது அந்த ஆராய்ச்சியில பல உண்மைகள தெரிய வந்தன.

இருதய நோய் வராமல் தடுப்பதற்கு ஒரே வழி யோகாசனம் தான. ஒரு தடவை மாரடைப்பு ஏற்பட்டவர்கள் கூட தொடர்ந்து 1 வருடம் யோகாசனப் பயிற்சி செய்தால் அவர்களுக்கு 2-வதுதடவைமாரடைப்பு ஏற்பட வாய்ப்பில்லை. அப்படி மாரடைப்பால் பாதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கையும் குறைந்த அளவே உள்ளன. அதாவது 20 சதவிகித பாதிப்பு குறைந்து 7 சதவிகிதம் தான்ஏற்படுகிறது.

இருதயநோய் வராமல் தடுக்க யோகாசன வழி முறைகளில் மிகவும் முக்கியமானது பிராணாயாமம் தான். அதாவது மூச்சை உள்ளே இழுத்து சற்று நிறுத்தி வெளியே விடுவது இதை முறைப்படி செய்தால் உடலுக்கும் உள்ளத்துக்கும் நன்மை பயக்கும்.

யோகாசனப் பயிற்சிகளை கடினமாக்கிக் கொள்ளக்கூடாது சாதாரணமாக எளிய முறையில உடலை அதிகம்வருத்திக் கொள்ளாமல் சுலபமாக செய்யவேண்டும் என்கிறார்கள் மருத்துவ நிபுணர்கள

தலைகீழாக நின்றுசெய்யும் "சிரசாசனம்" முறை சற்று கடினமானது. உடலின் பல பாகங்களை அந்த முறை பாதிக்கிறது எனகிறார் இருதய பாதுகாப்பு என்ற நூல் ஆசிரியர் டாக்டர் சி. வி. ஷா.

இருதய அறுவை சிகிச்சைக்காக அமெரிக்கா போன்ற நாடுகளுக்குச் சென்று சிகிச்சை பெறுகிறார்கள் அதற்காகஅவர்கள் செலவழிக்கும் பணம் சுமார்ரூ. 3லட்சத்துக்கும் மேல் இந்த அறுவை சிகிச்சையை இந்தியாவிலேயே மிகவும் நுட்பமாக செய்து கொள்ளலாம்.

அதற்காக இந்தியாவில் ரூ 10 ஆயிரம் மட்டுமே செலவு ஆகும் என்கிறார் டாக்டர்டி.எஸ்.ஜாவேரி.

"மாரடைப்புநோயால் பாதிக்கப்பட்டவர்கள் மற்றும் சில பிரமுகர்களும் இந்த ஆலோசனைக் கூட்டத்தில்கலந்து கொண்டனர்.

முன்னாள் பிரதமர் மொரார்ஜி தேசாய், பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரர் சுனில் கவாஸ்கர், பிரபல பாடகி (திருமதி) கிஷோரி அமோன்கார், புகழ்பெற்ற இருதய அறுவை சிகிச்சை நிபுணர் டாக்டர் கே. ஜி. நாயர், டாக்டர் தில்புல ஆகியோர்களும் கலந்து கொண்டனர் இவர்கள் தங்களது அனுபவங்களை அப்போது தெரிவித்தனர்

---

சென்னை

சென்ட்ரலில் இருந்து

## ரெயில்கள் வழக்கம்போல் செல்கின்றன

சென்னை, ஆக. 27— ஆந்திர மாநிலத்தில் நடைபெற்ற கிளர்ச்சி காரணமாக சென்னை சென்ட்ரலில் இருந்து புறப்படும் சில ரெயில்கள் ரத்துசெய்யப்பட்டிருந்தது தெரிந்ததே தற்போது ரத்து செய்யப்பட்ட அனைத்து ரெயில்களும் வழக்கம்போல் ஓடுவதாக தென் ரயில்வே அறிவித்துள்ளது.

**

## ஆட்டோ-வேன் மோதல்: ஒருவர் சாவு

சென்னை, ஆக 27— சென்னை கோடம்பாக்கம் பேட்டைச் சேர்ந்தவர் சலாவுதீன் (வயது30) இவரும் இவரது நண்பர் கமாலுல்லாவும் ஆட்டோவில் வேப்பேரி ரித்தர்டன் சாலையில் சென்றுகொண்டிருந்தபோதுவேன் மோதியதால் படுகாயமடைந்தனர்.

ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்ட சலாவுதீன் இறந்தார் கமாலுல்லா சிகிச்சை பெற்று வருகிறார்.

---

இலங்கை ராணுவம் அட்டூழியம்

## பெங்களூரில் 5 ஆயிரம் பேர் கண்டன ஊர்வலம்

**பெங்களூர், ஆக. 27- இலங்கையில் தமிழர்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளை கண்டித்து 5 ஆயிரம் பேர் ஊர்வலம் போனார்கள். ஊர்வலத்தின் இறுதியில் ஜெயவர்த்தனாவின் கொடும்பாவி எரிக்கப்பட்டது**

இலங்கையில் யாழ்ப்பாணம், வல்வெட்டித்துறை, மன்னார் ஆகிய இடங்களில் சிங்கள ராணுவத்தினரின் வெறியாட்டத்திற்கு ஏராளமான தமிழர்கள் பலியானது தெரிந்ததே.

இதனைக் கண்டித்து பெங்களூரில் 5 ஆயிரம் பேர் ஊர்வலம் போனார்கள்.

இலங்கையில் நடந்த படுகொலையைக் கண்டித்து எழுதப்பட்ட வாசகங்கள் கொண்ட அட்டைகளை ஊர்வலத்தினர் ஏந்திச் சென்றனர் அத்துடன் ஜெயவர்த்தனாவுக்கு எதிராக முழக்கங்களையும் எழுப்பினர்.

ஊர்வலத்தின் இறுதியில் நடந்த கூட்டத்தில் ஜெயவர்த்தனாவின் கொடும்பாவி எரிக்கப்பட்டது.

இந்த ஊர்வலத்துக்கு பல்வேறு தமிழ் அமைப்புகள் ஏற்பாடு செய்திருந்தன.

---

மகனுடன் தகராறு:

## ரெயில் முன் விழுந்து தாய் தற்கொலை

சென்னை, ஆக. 27— சென்னை வில்லிவாக்கத்தைச் சேர்ந்தவர் குப்புசாமிஇவரதுமனைவி கமலம்மாளுக்கும் மகனுக்கும் இடையே தகராறு ஏற்பட்டதாம். இதையடுத்து கமலம்மாள் ரெயில் முன் விழுந்து தற்கொலை செய்து கொண்டார். இது குறித்து போலீசார் விசாரித்து வருகிறார்கள்.

---

இலங்கைத்தமிழர் பிரச்சினை:

# புரட்சித்தலைவருடன் ஆலோசனை

### அமிர்தலிங்கம் தகவல்

**சென்னை. ஆக. 27- இலங்கைத் தமிழர் பிரச்சினை குறித்து கொழும்புசெல்லும் முன்பு புரட்சித்தலைவருடன் ஆலோசனை நடத்த உள்ளதாக இலங்கை தமிழர் தலைவர் அமிர்தலிங்கம் கூறினார்,**

இலங்கைத் தமிழர் ஐக்கிய முன்னணி பொதுச் செயலாளர் அமிர்தலிங்கம் இன்று (27-ந் தேதி) அளித்த பேட்டி ஒன்றில் கூறியதாவது:-

இலங்கை தமிழர் பிரச்சினை குறித்து ஏற்கனவே ஜி பார்த்தசாரதியுடன் பேசியுள்ளேன்.

இன்றிரவு மேலும் ஜி. பார்த்தசாரதியுடன் டெலிபோன் மூலம் தொடர்பு கொண்டு பேச உள்ளேன்.

நான் நாளைகொழும்புவிற்கு செல்லும் முன்பு முதல்வர் புரட்சித் தலைவருடன் ஆலோசனை நடத்துவேன்.

அதன் பிறகு கொழும்பு சென்று விட்டு மீண்டும் ஒருவாரத்தில் சென்னை வரக் கூடும்.

இலங்கை பிரச்சினையில் விரைவில் சுமுக தீர்வு ஏற்படும் என நம்புகிறேன்.

இவ்வாறு அமிர்தலிங்கம் கூறினார்.

---

அருணாசல்எக்ஸ்பிரஸ்

## ரயில் பெட்டியில் குண்டு வெடிப்பு

கவுகாத்தி, ஆக 27- அஸ்ஸாமில் அருணாசல் எக்ஸ்பிரஸ் ரயில் பெட்டி ஒன்றில் குண்டு வெடித்து சேதம் ஏற்பட்டது.

இதனால் ரயில் தண்டவாளமும் பாதிக்கப்பட்டது.

இந்த சம்பவம் காம்ரூப் மாவட்டத்தில் சொர்போக் என்றஸ்டேஷனில் நடந்தது.

இந்த விபத்தில் உயிர் சேதம் எதுவும் ஏற்படவில்லை.

பாதிக்கப்பட்ட ரயில் பாதை சீரமைக்கப்படுகிறது.

இந்த சம்பவத்தை ஒட்டி ரயில் பாதைகளில் பாதுகாப்பு பலப்படுத்தப்பட்டுள்ளது.

---

இந்தியன் ஏர்லைன்ஸ்

## ஊழியர்களுக்கு போனஸ்

புதுடெல்லி, ஆக 27- இந்தியன் ஏர்லைன்ஸ் ஊழியர்களுக்கு 1984-ம் ஆண்டுக்கு 20 சதவிகித போனஸ் வழங்கப்படும் என ஏர்லைன்ஸ் நிர்வாகம் அறிவித்துள்ளது,

---

## சிங்கப்பூரில் திருக்குறள் மாநாடு: ராசாராம் பங்கேற்பு

**சிங்கப்பூர், ஆக 27- சிங்கப்பூரிலுள்ள தமிழ் அமைப்புகள் சார்பாக திருக்குறள் மாநாடு நடைபெறுகிறது இந்த மாநாட்டில் சபாநாயகர் ராசாராம் பங்கேற்று பேசுகிறார்.**

தமிழறிஞர்கள் பலரும் பங்கேற்கும் இந்தமாநாடு சிங்கப்பூரில் சிறப்பாக நடைபெறுகிறது. சிங்கப்பூரில் உள்ள தமிழர்களிடையே திருக்குறளை பரப்பும் நோக்கத்தில் இந்த மாநாடு நடைபெறுகிறது.

இந்த மாநாட்டில் பங்கேற்பதற்காகசபாநாயகர் ராசாராம் இன்று காலை விமானம் மூலம் சென்னையிலிருந்து புறப்பட்டு மானார், மாநாட்டில் மற்ற நிகழ்ச்சிகளிலும் பங்கேற்று சபாநாயகர் ராசாராம் செப்டம்பர் 1ந் தேதி சென்னை திரும்புவார்.

பஞ்சாபில்

# 26 பயங்கரவாதிகள் கைது: பெரும் அளவில் ஆயுதங்கள் பறிமுதல்

சண்டிகார் ஆக. 27-பஞ்சாபின் பல்வேறு இடங்களில் நேற்று ராணுவத்தினர் பயங்கரவாதிகளை வேட்டையாடினர். ஒரே நாளில் 26 பயங்கரவாதிகள் கைது செய்யப்பட்டனர்.

தனிநாடு (காலிஸ்தான் உள்பட பல்வேறு கோரிக்கைகளை வற்புறுத்தி பிந்தரன்வாலே தலைமையில் ஒச்கிய தீவிரவாதிகளும், பயங்கரவாதிகளும் ராணுவத்தினருடன் மோதியதும் அதில் அவர்கள் நசுக்கப்பட்டதும் தெரிந்ததே.

ராணுவ நடவடிக்கை மேற்கொண்ட பிறகும் பஞ்சாபில் பயங்கரவாதிகள் அடியோடு ஒழியவில்லை.

அடிக்கடி அவர்கள் தொல்லை கொடுத்து வருகிறார்கள்.

## ராணுவ வேட்டை

நேற்று போலீசாரும் ராணுவமும் சேர்ந்து பஞ்சாபின் பல்வேறு இடங்களில் பயங்கரவாதிகளை வேட்டையாடினர் ஒரே நாளில் 26 பயங்கரவாதிகள் கைது செய்யப்பட்டனர்.

பல இடங்களில் மறைத்து வைக்கப்பட்டிருந்த ஆயுதங்களையும் வெடிமருந்துகளையும் கைப்பற்றினர்.

கைதானவர்களில் குருத்துவாரா பரீதா கோட் நிர்வாகத் தலைவர் இந்தர் ஜித்சிங் சைக்கோன் மற்றும் அரசினர் கல்லூரி முதல்வர் ஆகியோர் தேசிய பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் காவலில் வைக்கப்பட்டனர்.

ஸ்ரீஹர்கோபிந்த்பூர் என்னும் இடத்தில் காலிஸ்தானுக்கு ஆதரவாக கோஷமிட்டவாறு ராணுவத்தினரை தாக்கியதாகர்வாள் ஏந்திய ஐவரை குர்தாஸ்பூர் மாவட்ட போலீசார் கைது செய்தன.

இவர்களைத் தவிர குர்தாஸ்பூர் மாவட்டத்தில் 12 பேர், அமிர்தசரசில் 3 பேர், ஜலந்தர் மாவட்டத்தில் மூன்று பேர், பரீதா கோட் மாவட்டத்தில் 2 பேர், பாடிண்டாவில் ஒருவர் என 26 பயங்கரவாதிகள் கைது செய்யப்பட்டனர்.

மணப்பாறையில்

## அமைச்சர் ராதா பேசுகிறார்

திருச்சி. ஆக. 27-திருச்சிமாவட்டம் மணப்பாறையில் பேரறிஞர் அண்ணா பவள விழா பொதுக் கூட்டம் வரும் 29ந் தேதி புதன் மாலை 7மணி அளவில் விராலிமலை ரோட்டில் (டயர் ஒர்க்ஸ் அருகில்) க.கோவை ராசு தலைமையிலும், எஸ் சண்முகவேலாயுதம், ஏ.டி.பி. மாமுண்டி முன்னிலையிலும், வி. பழனிச்சாமி வரவேற்பிலும் நடைபெறுகிறது.

இந்தக் கூட்டத்தில் அமைச்சர்எஸ்.ஆர்.ராதா பங்கேற்று சிறப்புரையாற்றுகிறார். மாவட்ட இணைச் செயலாளர் நல்லுசாமி மற்றும் ஏ.எஸ். கணபதி, பொ.மதிவாணன் பி, சர்தார், எஸ், எம். அனீபா, என். சுப்பையா. ஏ. கலியபெருமாள், பி. முத்துசாமி உள்ளிட்ட பலர் பங்கேற்று பேசுகின்றனர். வி. பொன்ராஜி நன்றி கூறுகிறார். கூட்டத்திற்கான ஏற்பாடுகளை ஒன்றிய கழகமும், எம். ஜி ஆர். மன்றங்களும் செய்து வருகின்றன.

அண்ணா பவள விழா:

# குமரியிலிருந்து சென்னைக்கு அண்ணா ஜோதி

நாகர்கோவில் ஆக. 27-அண்ணா பவள விழாவையொட்டி குமரியில் இருந்து சென்னைக்கு அண்ணா ஜோதியை தொடர் நடைப்பயணமாக கழகத்தோழர்கள் எடுத்துச் செல்லுகிறார்கள்

குமரி மாவட்டத்தில் அண்ணா பவளவிழாவை ஒட்டி பல்வேறு இடங்களிலும் கழகக் கொடியேற்று விழாக்கள் நடந்து வருகின்றன.

இதைத் தொடர்ந்து புரட்சித்தலைவர் அரசின் சாதனைகளை விளக்கும் வகையில் கழகத்தோழர்கள் தொடர் நடைப்பயணமாக குமரியில் இருந்து சென்னைக்கு அண்ணா ஜோதியை எடுத்து வருகிறார்கள்.

குமரிமாவட்டம், கிள்ளியூர் ஒன்றிய கழகத்தின் சார்பில், அண்ணாஜோதி கொண்டு தொடர்நடைபயணமாக கழகத்தோழர்கள் சென்னை செல்லும் விழா, கருங்கல்லில் சிறப்பாக நடைபெற்றது.

இந்த விழாவுக்கு மாவட்ட கழக, மன்ற செயலாளர் தமிழ்மகன் உசேன் தலைமை வகித்தார். தொடர் நடைபயணத்தை, தீபமேற்றி, நாகர்கோவில் சட்டமன்ற உறுப்பினர் நாஞ்சில் வின்சென்ட் துவக்கி வைத்தார்.

அண்ணா ஜோதி நடைபயணவிழாவில தக்கலை ஒன்றிய செயலாளர் சிவகுற்றாலம், மன்ற செயலாளர் சேவியர்தனம், மாவட்ட பிரதிநிதி மோகன் குமார் மரிய சிசுகுமார் ஆகியோருடன் நூற்றுக்கும் மேற்பட்ட தொண்டர்கள் கலந்து கொண்டனர்

நடைபயணம் தொடர்ந்து 25 நாள் நடைபெற்று செப்டம்பர் 15ம் நாள சென்னை வந்தடைந்து புரட்சித தலைவரிடம் அண்ணா ஜோதி ஒப்படைக்கப்படும்.

# தமிழ் வளர்ச்சிக்கு ஆக்கபூர்வமாக செயல்படும் முதல்வர்

## அமைச்சர் கோவேந்தன் பேச்சு

தஞ்சாவூர், ஆக 27- தமிழ், தமிழன் என்று வெற்றுப் பேச்சு போது தமிழ் வளர்ச்சிக்கு ஆக்கபூர்வமாக செயல்படும் தலைவராக முதல்வர் புரட்சித்தலைவர் விளங்குகிறார் என அமைச்சர் கோவேந்தன் கூறினார்.

தஞ்சை மாவட்டம் பேராவூரணி முதுகாட்டில் கழகத்தோழர் ஆனந்தராஜின் மகள் சுதந்திரா தேவிக்கும் புதுக்கோட்டை மாவட்டம் ஏம்பலைச் சேர்ந்த கருப்பையாவுக்கும் நடைபெற்ற திருமணத்தை அமைச்சர் கோவேந்தன் நடத்தி வைத்தார். இந்த மணவிழாவிற்கு பட்டுக்கோட்டை பாப்பையன் தலைமை தாங்கினார்

மணவிழாவில் அமைச்சர் கோவேந்தன் பேசுகையில் கூறியதாவது:-

சுயமரியாதைக்குடும்பத் திருமணம் இது தந்தை பெரியாரின் சீரிய முயற்சியால் தான் இந்த சமுதாயத்தில் நிலவிய மூடப்பழக்க வழக்கங்கள் மாற்றப்பட்டன. தந்தைபெரியார் பேரறிஞர் அண்ணா வழியில் நடக்கும் தொண்டர்களை புரட்சித்தலைவர் வழிநடத்திச் செல்கிறார்.

இங்கே வாழ்த்துரை வழங்கிய சிலர் தமிழ் வளர்ச்சி பற்றி குறிப்பிட்டார்கள். தமிழ், தமிழன், தமிழ் இனம் என்று சிலர் வெறும்பேச்சு பேசிக்கொண்டிருக்கிறார்களே தவிர, புரட்சித் தலைவரைப் போல தமிழ் வளர்ச்சிக்கு ஆக்க பூர்வமாக தொண்டாற்றுபவர் எவருமில்லை.

பேரறிஞர் அண்ணாவுக்கு பிறகு மதுரைமாநகரில் 5 வது உலகத்தமிழ் மாநாட்டை நடத்தி தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக்கழகத்தை உருவாக்கி விரைவில் மதுரையில் உலக தமிழ்ச் சங்கம் உருவாக்கும் முயற்சிகளிலும் ஈடுபட்டு வருபவர் புரட்சித்தலைவர் தான். அண்ணா, பாரதியார், பாரதிதாசன் பெயரில் பல் கலைக் கழகங்களை உருவாக்கியவர் டாக்டர் புரட்சித்தலைவர்.

### தமிழ்ப் பற்று

வெறும் பேச்சு பேசாமல் ஆக்கபூர்வமாக தமிழ் வளர்க்கும் தலைவர் முதல்வர் புரட்சித் தலைவர் ஒருவரே உண்மையான தமிழ்ப் பற்று உள்ளவர்கள் புரட்சித்தலைவர் அவர்கள் பல் [illegible] வேண்டும்

மணமக்கள் பல்வளமும் நலமும் பெற்று புரட்சித் தலைவரும் கொலைக்[illegible]ணமும் போல பல்லாண்டு வாழ வாழ்த்துகிறேன்.

இவ்வாறு அமைச்சர் கோவேந்தன் பேசினார்.

மற்றும் இவ்விழாவில் விஜயபுரம் முன்னாள் ஊராட்சிமன்றத்தலைவர் இராமானுஜம் (இ.காங்) டாக்டர் இராமையா மேற்கு தஞ்சை மாவட்ட கழக செயலாளர் ஆர். சாமிநாதன் பேராவூரணி மலையப்பன் பேராவூரணி ஒன்றிய அமைப்பாளர் ஆர். சுந்தரம், சேதுபாவாசத்திரம் ஒன்றிய அவைத் தலைவர் சாமிப்பிள்ளை, பொருளாளர் தேவதாஸ். பட்டுக்கோட்டை-பிச்சை பேராவூரணி நகரச் செயலாளர் தர்மராஜ். சுந்தரராசன், ஆ மு. தங்கவேல், மணி, அறந்தாங்கி ஒன்றிய துணைச் செயலாளர் செவ்[illegible] மற்றும் பலர் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கினர்

சேதுபாவா சத்திரம் ஒன்றிய கழக செயலாளர் வி வெங்கடாசலம் நன்றி கூறினார்.

அண்ணாவின் பெயரை மறைந்து

# நெல்லுக்கும், புல் பூண்டுக்கும்தன்பெயரை சூட்டிய கருணாநிதி

## சுலோசனாசம்பத் குற்றச்சாட்டு

மதுரை. ஆக 27. தன் ஆட்சிக் காலத்தில் அண்ணாவின் பெயரை மறைத்து நெல்லுக்கும், புல்லுக்கும், பூண்டுக்கும் தன் பெயரைச் சூட்டி மகிழ்ந்தவர் கருணாநிதி என்று சுலோசனா சம்பத் கூறினார்.

மதுரையில் நடந்த குடிசை மாற்று வாரிய விழாவில் சுலோசனா சம்பத் கூறியதாவது:-

பழந்தமிழ் காலம் தொட்டே மதுரை மாநகர் கட்டிடக் கலையில் சிறந்து விளங்குகிறது. இங்கே திருமலை நாயக்கர் மஹால் கட்டிட கலைக்கே சான்று கூறுகிறது.

இப்படி அழகாகத் திகழும் மாமதுரையில் ஆங்காங்கே குடிசைப் பகுதிகள் இருப்பது அழகான முகத்தில் பருக்கள் இருப்பது போல இந்த நகரின் அழகைக் குறைப்பதாக உள்ளது.

ஆகவேதான், புரட்சித் தலைவர் சென்னை மாநகரில் மட்டுமேசெயற்பட்டு வந்த குடிசைப்பகுதி மாற்று வாரியத்தைத் தமிழ்நாடு முழுவதற்கும் விரிவுபடுத்தி, மதுரை திருச்சி, கோவை ஆகிய பெரு நகரங்களில் குடிசைகளை அகற்றி அடுக்குமாடிக் கட்டிடங்களை ஏற்படுத்திட வழி கண்டுள்ளார்.

அந்த அடிப்படையிலே தான் இன்று இங்கே- தமிழ்நாடு குடிசைப்பகுதி மாற்று வாரியத்தில் மதுரை கோட்ட அலுவலகம் மதுரை மாநகரில திறக்கப்படுகிறது

### ஆதரவு தாரீர்

மதுரை மாநகரில் குடிசைகளை அகற்றி, இங்கே அடுக்குமாடிக் கட்டிடங்களைஏற்படுத்தி ஏழை மக்களை ஆரோக்கியச் சூழ்நிலையில் குடியமர்த்தி புது வாழ்வு தரும் பணியில், இந்தப் பகுதி மக்கள் அனைவரும் குறிப்பாக அரசியல்கட்சிகளைச் சார்ந்தோர் கட்சி வேறுபாடின்றி, ஒத்துழைப்பு தரக் கேட்டுக் கொள்கிறேன்.

இது, ஏழைகளை வாழ வைத்திடும் பணி, இதிலே கட்சி அரசியலுக்கு இடமில்லை. சமுதாயத்தில் எண்ணிக்கையில் மிக அதிகமாக உள்ள இந்த ஏழை மக்களை உயர்த்தினால் தான் நாம் எதிர்பார்க்கிற சமதர்ம சமுதாய வெற்றி சாத்தியமாகும்.

ஆகவே அனைத்துக் கட்சியினரும் பொது மக்களும், குடிசை மாற்று வாரியத்தின் இந்த அரிய முயற்சிகளுக்குத் துணை நிற்க வேண்டும்.

இன்றைக்கு புரட்சித் தலைவர் ஆட்சியில் தொடர்ந்து சாதனைகள் நடைபெற்று வருகின்றன இதைப் பொறுக்காத எதிர்கட்சித் தலைவர்- தட்டேந்த வைக்கிற திட்டம், பிச்சைக்காரத் திட்டம் என்று சொன்ன எதிர்க் கட்சித் தலைவர் தமது ஆட்சி வந்தாலும் சத்துணவுத் திட்டத்தை தொடர்வேன் என்று சொல்வது எந்த அடிப்படையில் என்று புரியவில்லை

### குறை கூறுவது சரியா?

அவரது ஆட்சியிலும் குழந்தைகளைத் தட்டேந்த வைப்பாரா? பிச்சைக்காரத் திட்டம் என்று சொல்பவர்-அதை தமது ஆட்சியிலும் அமுல்படுத்துவேன் என்பது என்ன அர்த்தம்? அவர் குழம்பிப்போயிருக்கிறார்" என்பதைத்தான் காட்டுகிறது.

கல்வித் துறையில் இன்று மாறுதல் செய்யப்பட்டு தொழில் கல்வி புகுத்தப்பட்டு மாணவர்கள் படித்து முடிந்ததும் வேலை வாய்ப்புக் கிடைக்க வழிகாணப்பட்டுளளது வீட்டுக்கொருவருக்கு வேலைத் திட்டம் வியத்தகு முறையில் செயற்படவிருக்கிறது.

புதிய புதிய பல்கலைக் கழகங்கள் - மகளிர்க்கு தனிப் பல்கலைக் கழகம் தமிழுக்கென தனிப் பல்கலைக் கழகம் என்று கல்வித்துறை மேன்மை பெற்று விளங்குகிறது.

விவசாயத் துறையில் புரட்சித்தலைவர் ஆட்சி மீண்டும் வந்ததும் ஏழை விவசாயிகளுக்கான கடன்கள் 200 கோடி அளவில் ரத்து செய்யப்பட்டும், புதிய கடனுதவிகளை வழங்கியும், சலுகைகள்வழங்கியதோடு இன்று புரட்சித் தலைவர் துணிவான அறிவிப்பு ஒன்றையும் விடுத்துள்ளார்.

"சிறு விவசாயிகள் அனைவருக்கும்மின்சாரம் இலவசம்" என்ற புதுமையான அழைப்பு விவசாயிகள் மனதில் உற்சாகத்தை ஏற்படுத்தியுள்ளது.

குடிசைக்கு ஒரு மின் விளக்கு திட்டம் புரட்சித் தலைவர் ஆட்சியில்அமுல் படுத்தப்பட்டு இன்று மின்சாரம் இல்லாத கிராமமே இல்லை எனும் வியத்தகு நிலை ஏற்பட்டுவருகிறது.

தொழிலாளர்களுக்கான உரிமைகளை நிலைநாட்டத் தக்க புதிய சட்டங்கள் இயற்றப்பட்டு தொழிலாளர் அமைதி காக்கப்பட்டுவருகிறது.

கருணாநிதி இவற்றைப் பாராட்ட முடியாவிட்டாலும் சும்மாவாவதுஇருக்கலாம். ஆனால் இன்று மாவட்டப் பிரிவினைகளைக் கொண்டு பிரச்சினைகளை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்.

இன்று அவர் அடுத்த கிளர்ச்சிக்குத் தயாராகிறார். செங்கற்பட்டு மாவட்டத்திற்கு அண்ணா மாவட்டம் என்று பெயரிடவேண்டும் என்ற கிளர்ச்சியாம். இவ்வளவு அக்கறையுள்ளவர் இவர் ஆட்சியிலிருந்தபோது அதைச்செய்திருக்கலாமே எங்கும் எதிலும் அண்ணா பெயரை மறைத்து தன்பெயரையே சூட்டிக்கொண்டார்.

திருவாரூர் கல்லூரிக்குக் கூட கருணாநிதி கல்லூரி என்று தன்பெயரை சூட்டினார். சென்னையில் அமைந்த பெரியார் மாளிகைக்கு "கருணாநிதி மாளிகை" என்று பெயர் சூட்டினார் புல, பூண்டு, பயறு பச்சைகளுக்கும் தன் பெயரையும் தன் குடும்பத்தார் பெயரையும் சூட்டினார். கருணா நெல், அஞ்சுகம் பாசிப்பயறு என்றெல்லாம் சூட்டினார் இன்று இவர் அண்ணாவுக்கு வக்காலத்து வாங்க என்ன இருக்கிறது?

இவ்வாறு சுலோசனா சம்பத் கூறினார்.

சென்னை 10-வது வட்டக் கழக

### ஆலோசனைக் கூட்டம்

சென்னை, ஆக. 27—அண்ணா பவளவிழா குறித்து ஆலோசிக்க சென்னை ராயபுரம் 10வதுவட்ட கழகஆலோசனை கூட்டம் நாளை (28ந்தேதி) மாலை 6-30 மணிககு நெ 10 கிரேஸ் கார்டன 5-வது சந்து என்ற முகவரியில் மு வேதாசலம் தலைமையில இரா சோமசுந்தரம் முன்னிலையில வட்ட நிர்வாகிகள் கிளைசார்புமன்ற நிர்வாகிகள் ஆலோசனைக் கூட்டம் நடைபெறுகிறது

அனைவரும் கலந்து கொள்ளுமாறு வட்டச் செயலாளர் ஆ. தாமோதரன் கேட்டுக்கொண்டுள்ளார்.

ஆலந்தூரில்

### அண்ணா பவள விழா கூட்டம்

சென்னை, ஆக. 27—ஆலந்தூர் ஜிலானிசாயபு தெருவில் நாளை (28ந் தேதி) மாலை 7 மணிக்கு எம், கசேந்திரன் தலைமையில் அண்ணா பவளவிழா பொதுக் கூட்டம் நடைபெறுகிறது. கூட்டத்தில் திருவை அண்ணாமலை, அப்துல்ரசாக் எம் எல்.ஏ, ஆலந்தூர்பாலன், லெனின் ஜானகிராமன் மற்றும் பலர் பேசுகின்றனர்.

மதுரை நகரில்

### கழகத்தில் இணைந்த தி.மு.கவினர்

மதுரை, ஆக. 27-மதுரைநகர் 11-வது வட்டம் கரும்பாலையில், எம்.ஜி.ஆர். மன்றசார்பில் அண்ணா பவள விழாக் கூட்டம் நடைபெற்றது.

கூட்டத்தில் தமிழக அரசின் டெல்லி சிறப்பு பிரதிநிதி ஜி ஆர்.எட்மண்ட் கலந்து கொண்டார்.

இக்கூட்டத்தில் 11-வது வட்ட இந்திராகாங்கிரஸ் செயலாளர் எம். தனசேகரன், 11-வது வட்ட தி.மு.க இளைஞர் அணி செயற்குழு உறுப்பினர்களான ஆர். பாலன், எம். கண்ணன். மகேந்திரன். ராசா ஆகியோர் கழகத்தில் இணைந்தனர்.

கழகத்தில் இணைந்தோருக்கு ஜி ஆர். எட்மண்ட் மதுரை எஸ பாண்டியன், ஏ. கிருபானந்தம், லட்சுமி நாராயணன ஆகியோர் மாலைகளும் கைத்தறி ஆடைகளும் அணிவித்தனர்.

ஒலிம்பிக் பற்றிய விவரங்கள் கொண்ட

### புத்தகம் வெளியீடு

சென்னை, ஆக. 27—"ஒலிம்பிக் அன்றும் இன்றும்" என்ற தலைப்பில் பத்திரிகையாளர் 'சலன்' எழுதியுள்ள புத்தகத்தை பாலபாரதி ச. து. சு. யோகியார் பதிப்பகம் (38, சாதுல்லா தெரு சென்னை-17) வெளியிட்டுள்ளது

ரூ. 5.50 விலையுள்ள இந்த புத்தகத்தில் சலன் ஒலிம்பிக் போட்டிகள் தொடக்கம் முதல் லாஸ் ஏஞ்சல்ஸ் போட்டிகள் வரை சுவைபட எழுதியுள்ளார். புத்தகத்தில் ஆங்காங்கே கார்டூன் சித்திரங்களும் உள்ளன. விளையாட்டு பிரியர்கள் விரும்பிப் படிக்க ஏற்ற புத்தகம்.

### விளாத்திகுளம் ஒன்றிய கழகக் கூட்டம்

திருநெல்வேலி. ஆக. 27-விளாத்திகுளம் ஒன்றிய கழகக்கூட்டமும் இளைஞர் அணி துவக்க விழாவும், கழகத் தோழர்கள் கூட்டமும் நடைபெற்றது.

கூட்டத்திற்கு ஆர். கே. பெருமாள். எம். எல். ஏ. தலைமை வகித்தார்.

மாவட்ட எம்- ஜி ஆர். இளைஞர் அணி துணைத் தலைவர் சேதுராமன் முன்னிலை வகித்தார்.

கூட்டத்தில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

இலங்கை தமிழர்களை இலங்கை ராணுவம் படுகொலை செய்வதைக் கண்டித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### 44-வதுவட்டக் கழக ஆலோசனைக் கூட்டம்

44வது வட்டக் கழக ஆலோசனைக்கூட்டம் நாளை (28ம்தேதி) மாலை 6 மணிக்கு 63-தாஸ்நகர் 2வது தெரு. கன்னிகாபுரத்தில் நடைபெறுகிறது

வட்ட நிர்வாகிகள்- மேலமைப்புபிரதிநிதிகள்- வட்டசெயற்குழு உறுப்பினர்கள்-சார்பு மன்றச் செயலாளர்கள் அனைவரும் தவறாது கலந்து கொள்ளுமாறு வட்டச் செயலாளர் எஸ். கிருஷ்ணசாமி கேட்டுக் கொண்டுள்ளார்.



தலைமைக்கழக அறிக்கை

# செப். 1, 2 தேதிகளில் சென்னையில் செயற்குழு- பொதுக்குழு

வரும் 1-9-84, 2-9-84 ஆகிய (சனி, ஞாயிறு) தேதிகளில் கழக செயற்குழு. பொதுக்குழுக் கூட்டங்கள் சென்னையில் கழக நிறுவனத் தலைவர் மாண்புமிகு டாக்டர்

## புரட்சித்தலைவர்

அவர்கள் முன்னிலையில், அவைத் தலைவர் திருமிகு. ஈ.வெ.அ. வள்ளிமுத்து எம்எல்சி அவர்கள் தலைமையில் நடைபெறும்.

1-9-84 காலை 10 மணி செயற்குழு

1-9-84 மாலை 4 மணி பொதுக்குழு

2-9-84 பொதுக்குழு

உறுப்பினர்களுக்கு அழைப்புகள் அனுப்பப்படும். அழைப்பு பெறுவோர் மட்டில் கலந்துகொள்ளவேண்டுகிறேன்.

கழக சட்டமன்றமேலவை, பேரவை. நாடாளுமன்றம். மாநிலங்கள் அவை உறுப்பினர்களும் சிறப்பு அழைப்பினராகக் கலந்துகொள்வார்கள்.

தவறாமல் அனைவரும் கலந்து கொள்ள வேண்டுகிறேன்.

அன்புள்ள,

ப. உ. சண்முகம்

பொதுச் செயலாளர்

சென்னை-14

27-8-84

# சபாநாயகர் ராஜாராம் பிறந்தநாள்: முதல்வர் வாழ்த்து

சென்னை, ஆக. 27-சபாநாயகர் ராஜாராமின் 59-வது பிறந்தநாளை ஒட்டி முதல்வர் புரட்சித் தலைவர் அவருக்கு வாழ்த்துக் கூறினார்.

சபாநாயகர் ராஜாராம் 59வது பிறந்த நாளை நேற்று அவரது வீட்டில் கொண்டாடினார்.

அவருடைய பிறந்த நாளையொட்டி முதல்வர் புரட்சித் தலைவர் டெலிபோன் மூலம் பிறந்தநாள் வாழ்த்து தெரிவித்தார்.

தமிழக மேலவைத் தலைவர் ம. பொ. சி. அமைச்சர்கள் பொன்னையன், கே.ஏ.கே., ஆர். எம். வீ., ராகவானந்தம் நாமக்கல் அருணாசலம், கலைமணி ஆகியோர் நேரில் வந்து வாழ்த்து தெரிவித்தனர்.

குடிசைமாற்று வாரியத் தலைவர் சுலோசனா சம்பத், எம். எல். ஏக்கள் மணிமாறன், முத்து கிருஷ்ணன், கம்பம் கோபால், இலங்கைத் தமிழர் தலைவர் அமிர்தலிங்கம், ஜனார்த்தனம் எம். எல். சி. ஆகியோரும் நேரில் சென்று வாழ்த்தினர்.

அமைச்சர் பண்ருட்டியார் கழகப்பொருளாளர் மாதவன், ஆகியோர் டெலிபோன் மூலம் வாழ்த்து தெரிவித்தனர்.

தொழில் அதிபர்கள் எம். ஏ. எம். ராமசாமி பொள்ளாச்சி மகாலிங்கம் நடிகர் ஜெமினி கணேசன் மற்றும் சினிமா பிரமுகர்கள் பலர் நேரில சென்று பிறந்தநாள் வாழ்த்துக்களை தெரிவித்தனர்.

## சமுதாய மன்ற கட்டிடத் திறப்பு விழா

மதுரை, ஆக. 27— மதுரை மாவட்டம் கொட்டாம்பட்டி ஒன்றியத்தின் நெல்லுக்குண்டுப் பட்டியில் மேலூர் சட்ட மன்றஉறுப்பினர் வீரணன் அம்பலம் தலைமையில் மதுரை மாவட்ட அறங்காவலர் குழு உறுப்பினர் சிவராமன் முன்னிலையில் அமைச்சர் யூசுப் சமுதாய மன்ற கட்டிடத்தை திறந்து வைத்தார்.

விழாவில் மதுரை மாவட்ட பால்வளத் தலைவர் வெ. பாலகுரு, சத்துணவுத் திட்ட மாவட்ட ஆட்சியாளரின் நேர்முக உதவியாளர் ஜவகர்லால், கோட்ட வளர்ச்சி அதிகாரி முத்தையா, கொட்டாம்பட்டி ஒன்றிய ஆணையாளர் பாலசுப்பிரமணியம் மக்கள்குழுமுகமதுஷெரீப் மேலூர்தொகுதி விவசாய பிரிவு செயலாளர் ஆண்டிச்சாமி, மேலூர் எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் முத்துவேல் என்ற சண்முகம், மேலூர் சந்திரமோகன ஆகியோர் கலந்து கொண்டனர்.

# முதல்வர் தலைமையில் சுலோசனாசம்பத் மகள் திருமணம்

சென்னை, ஆக. 27- முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத் தலைவர் சுலோசனாசம்பத்தின் மகள் அன்பெழில் திருமணம் செப்டம்பர் 3-ந் தேதி சென்னையில் நடக்கிறது.

சுலோசனாசம்பத்துக்கு இளங்கோவன், கவுதமன் மதிவாணன், இனியன் சம்பத் ஆகிய 4 மகன்களும், நாகம்மாள, அன்பெழில் ஆகிய 2 மகள்களும் இருக்கிறார்கள்.

அவர்களில் இனியன் சம்பத், அன்பெழில் தவிர மற்றவர்களுக்கு திருமணமாகி விட்டது.

பி. காம், எம். பி. ஏ. படித்தவரான அன்பெழிலுக்கும் 'பிரிகேடியர்' பா. என். எஸ். ராவின் மகன் சூர்யராஜ் குமாருக்கும் இப்போது திருமணம் நிச்சயிக்கப்பட்டுள்ளது.

சூர்யராஜ்குமார் பி. ஏ. (ஆனர்ஸ்) பி. ஜி. டி. பி. எம் எம்.பி.ஏ, படித்தவர் பஜாஜ் நிறுவனத்தின் பிராந்திய மானேஜராக பணியாற்றுகிறார்.

அன்பெழில் - சூர்யராஜ் குமார் திருமணம் செப்டம்பர் 3-ந் தேதி (திங்கட்கிழமை) மாலை 5மணிக்கு வடபழனி விஜயா சேஷ மஹால் திருமண மண்டபத்தில் நடைபெறுகிறது.

முதல்வர் புரட்சித் தலைவர் தலைமைதாங்கி திருமணத்தை நடத்தி வைக்கிறார்.

தமிழக ஆளுனர் குரானா, மத்தியஅமைச்சர் பூட்டாசிங், மேலவைத் தலைவர் ம. பொ. சி. சபாநாயகர் ராசாராம், நிதியமைச்சர் டாக்டர் நாவலர், கழக பொதுச் செயலாளர் ப. உ. ச. அகில இந்திய இந்திரா காங்கிரஸ் பொதுச்செயலாளர் கருப்பையா மூப்பனார் தமிழ்நாடு இந்திராகாங்கிரஸ் தலைவர் எம். பழனியாண்டி, திருவாரூர் தங்கராசு ஆகியோர் மணமக்களை வாழ்த்திப் பேசுகிறார்கள்.

குமரி மாவட்ட கழக மாணவர் பிரிவு நடத்தும்

## கட்டுரை போட்டி

நாகர்கோவில், ஆக 27- குமரி மாவட்ட கழக மாணவர் அமைப்பின் சார்பில் வருடந்தோறும் பேரறிஞர் அண்ணா பிறந்த நாளை ஒட்டி கட்டுரைப் போட்டிகளை நடத்தி பரிசுகள் வழங்கி வருகிறது அதுபோல்இந்த வருடமும் அண்ணா பவள விழாவை ஒட்டி தமிழக முதல்வர் டாக்டர் புரட்சி தலைவரின் தொழில்கல்வி திட்டம் என்ற தலைப்பில் ஒரு கட்டுரைப்போட்டி நடத்துகிறது. போட்டி மேலநிலை உயர்நிலைப் பள்ளிமாணவ, மாணவிகளும் தனியாகவும் பொது மக்களுக்கு தனியாகவும் நடத்தப்படுகிறது. போட்டியில் பள்ளி, கல்லூரி மாணவ, மாணவிகள் மற்றும பொதுமககளும் கலந்து கொள்ளலாம். போட்டிக்கான கட்டுரைகளை அ. செல்வின்குமார் மாவட்ட மாணவர் அமைப்பாளர், நீதிமன்ற சாலை, நாகர்கோவில், குமரி மாவட்டம் என்ற முகவரிக்கு செப்டம்பர் 15க்குள் அனுப்ப வேண்டுமென்று குமரி மாவட்ட மாணவர் அமைப்பாளர் அ. செல்வின்குமார் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

இந்தியாவிலேயே

# போக்குவரத்து துறையில் சிறந்து விளங்குவது தமிழகமே

## அமைச்சர் பண்ருட்டியார் பெருமிதம்

விழுப்புரம், ஆக. 27- இந்தியாவிலுள்ள 22 மாநிலங்களில் தமிழகத்தில் தான் போக்குவரத்துத் துறைசிறந்து செயல்படுகிறது என்று அமைச்சர் பண்ருட்டியார் கூறினார்.

தந்தை பெரியார் போக்கு வரத்து கழகத்தின் புதிய வழித்தடங்கள் துவக்கவிழா பண்ருட்டி பேருந்துநிலையத்தில் நடைபெற்றது. இவ்விழாவிற்கு தென் ஆற்காடு மாவட்ட ஆட்சியாளர் நாகராஜன் தலைமை வகித்தார்.

புதிய வழித் தடங்களை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் துவக்கி வைத்துப் பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

இந்தியாவிலுள்ள 22 மாநிலங்களில் தமிழகம் தான் அரசுபோக்குவரத்து நடத்துவதில் சிறப்பாக செய்து வருகிறது.

பண்ருட்டியில் பெரியார் போக்குவரத்து கழகத்தின் பஸ் பாடி கட்டும் தொழிற்சாலை ஒன்றுகட்டப்பட்டுள்ளது. இன்னும் இரண்டு அல்லது 3 மாதங்களில் அத் தொழிற்சாலையில் உற்பத்தி துவங்கும்.

### ஈரோட்டில் கல்லூரி

போக்குவரத்து கழகங்களால் ஈரோட்டில் துவக்கப்பட்டுள்ள பொறியியல் கல்லூரியில் போக்குவரத்துக்கழக ஊழியர்களின் மகன்கள் 26 பேருக்கு இடம் கொடுக்கப்பட்டுள்ளது.

பஸ்களில் பயணம் செய்யும் மக்களிடம் அன்புடனும், மரியாதையுடனும் ஊழியர்கள் நடந்து கொள்ள வேண்டும்.

அரசு போக்கு வரத்து கழக ஊழியர்கள் இதை வேண்டுகோளாக ஏற்று இக்கருத்தை மையமாகக் கொண்டு பணியாற்ற வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

விழாவில் சட்ட மன்ற உறுப்பினர் தங்கராசு, மேலவை உறுப்பினர் சிவராமன் உட்பட பலர் பேசினர்.

இலங்கை ராணுவம் மீண்டும் வெறியாட்டம்

# பார்த்தசாரதிக்கு அமிர்தலிங்கம் அவசர அழைப்பு

சென்னை, ஆக. 27- இலங்கையில் மீண்டும் ராணுவத்தினர் தமிழர்கள் மீது வெறித்தாக்குதல் நடத்துகிறார்கள். தமிழர்களின் பிரச்சினைகளை தீர்க்க இந்திய பிரதமர் இந்திராவின் விசேஷதூதர் ஜி. பார்த்தசாரதி மீண்டும் கொழும்புக்கு உடனடியாக வரவேண்டும் என்று அமிர்தலிங்கம் கேட்டுக் கொண்டார்.

அமிர்தலிங்கம் சென்னையில் நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது.

இலங்கையில் நடக்கும் இனத்தகராறுக்கு தீர்வு காண்பதில் இந்தியாவின் சமரச முயற்சியை நாங்கள் கருத்தில் கொண்டுள்ளோம்.

பேச்சுவார்த்தை மூலம் தீர்வு ஒன்றை உருவாக்க பிரதமர் இந்திராகாந்தி முயற்சி செய்துவருகிறார்.

இலங்கைவாழ் தமிழர் பிரச்சினை குறித்து நான் ஏற்கனவே பிரதமர் இந்திராகாந்தியின் விசேஷதூதர் ஜி. பார்த்தசாரதியுடன் ஆலோசனை நடத்தியிருக்கிறேன்.

இலங்கைராணுவத்தினர் இலங்கைத் தமிழர்கள் மீதுமீண்டும் வெறித்தாக்குதல் நடத்துகிறார்கள், தமிழர்களின் சொத்துக்களும், உயிர்களும் பலியாகின்றன. ஏராளமான தமிழ் இளைஞர்களை ராணுவத்தினர் பிடித்துச் செல்கிறார்கள்.

டெல்லியல் நடைபெற்ற பேச்சு வார்த்தையின் போது இந்திய அரசுக்கு அளித்த உறுதி மொழிகளை இலங்கை அரசு நிறைவேற்ற தவறிவிட்டது. ஆனாலும் இந்தியாவின் முயற்சி இல்லாமல் இருந்தால் இலங்கைத் தமிழர்களின் கதி மிகவும் மோசமாகி இருக்கும்.

### மாநில - கவுன்சில்கள்

மாநில கவுன்சில் பற்றிய ஜெயவர்த்தனேவின் தீர்மானம் தெளிவாக இல்லை. தமிழர்களுக்கு சாதகம் ஏற்படுவதாக அவரது தீர்மானம் இல்லை.

நாட்டின் பிரிவினைக்கு வழிவகுக்கும் என்ற சாக்குப் போக்குகள் கூறி வடக்கு கிழக்கு மாநிலங்கள் ஒரே கவுன்சில் கீழ் இணைவதற்கு ஜெயவர்த்தனே எதிர்ப்பு தெரிவிப்பது முற்றிலும் தவறாகும் மாநிலசுயாட்சி கோரிக்கையை நாட்டின் பிரிவினையாக சிங்கள அரசியல்வாதிகள்வேண்டுமென்றே பெரிது படுத்தி விளக்கம் அளிக்கிறார்கள் ஜெயவர்த்தனோவின் நிலையும் இப்படித்தான உள்ளது.

அனைத்துக் கட்சி மாநாட்டில் முட்டுக் கட்டை ஏற்பட்டுள்ளது. இந்த நிலைமையை நீக்குவதற்கு பிரதமர் இந்திரா காந்தியின் விசேஷ தூதர் ஜி பார்த்தசாரதி மீண்டும் கொழும்புக்கு வருகை தர வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

### முட்டுக்கட்டைக்கு தீர்வு

பேச்சுவார்த்தை ஏற்பாட்டை துவக்கி வைத்த பிரதமர் இந்திராவின் விசேஷ தூதர் பார்த்தசாரதியினால் மட்டுமே இந்த முட்டுக்கட்டை நிலைக்கு தீர்வு காண இயலும் என்பதை திட்டவட்டமாகக் கூற விரும்புகிறேன். ஒரே அமைப்பின் கீழ் பிராந்தியகவுன்சில்கள் என்பது சமஷ்டி ஏற்பாடாக அமையாது. சமஷ்டி அமைப்பும் நாட்டின் பிரிவினையாகாது.

இலங்கையில் இரண்டு இனத்தவர் சம்பந்தப்பட்ட விவகாரத்தில் மிகவும் நெருக்கடியான கட்டத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறோம்.

நேற்று இரவு நான் தொலைபேசி மூலம் பார்த்தசாரதியுடன் தொடர்பு கொண்டேன். நாளை செவ்வாயன்று மாலை நான் கொழும்புக்கு செல்கிறேன்.

ராணுவத்தினரின் வன்செயலுக்கு சில முதிர்ச்சியற்ற சிப்பாய்களே காரணம் என்று இலங்கை பாதுகாப்பு அமைச்சர் அதுலத் முதலி சாலஜாபு கூறுவது வேடிக்கையாக இருக்கிறது. முதிர்ச்சியற்ற சிப்பாய்களை தமிழ் மாநிலங்களுக்கு அவர் ஏன் அனுப்பவேண்டும்?

சட்டம் ஒழுங்கு நில உடன்பாடு போன்றவை சம்பந்தப்பட்ட அதிகாரங்களுடன் வடக்கு, கிழக்கு மாநிலங்கள் இணைந்த பிராந்திய கவுன்சில் அமைப்பு பற்றி பரிசீலிக்க தமிழர்கள் தயாராக இருக்கிறார்கள்.

இவ்வாறு அமிர்தலிங்கம் கூறினார்.

ராணுவத்தினரின் தாக்குதலுக்குப்பயந்து தமிழர் குடும்பங்கள் அந்தப்பகுதியில் இருந்து வெளியேறிக் கொண்டிருக்கின்றன, அகம்டன் கிராமத்தில் 20க்கும் மேற்பட்ட வீடுகளுக்கு ராணுவத்தினர் தீவைத்தார்கள்.

புதன்கிழமைதொடங்குவதாக இருக்கும் அனைத்துக்கட்சி மாநாட்டில் கலந்து கொள்வது பற்றி நான்நாளை எனது சகாக்களுடன் கலந்து பேசுவேன் என்றும் அவர் கூறினார்.



51-வது வட்டத்தில்

## பொது உறுப்பினர்கள் கூட்டம்

சென்னை 51-வதுவட்ட பொது உறுப்பினர்கள் கூட்டம் இன்று (27ந்தேதி) மாலை 6 மணி அளவில் முக்கர் நல்லமுத்து தெருவில் கவிஞர் வைத்தியம் தலைமையில் நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில் எம். வி. ராமன், மண்ணடி கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் கலந்து கொள்கின்றனர் கழக வட்ட நிர்வாகிகளும் மன்ற தோழர்களும் தவறாமல் கலந்து கொள்ளுமாறு வட்ட செயலாளர் எம். எஸ் மணி கேட்டுக் கொண்டுள்ளார்.

52வது வட்ட

## பொது உறுப்பினர் கூட்டம்

சென்னை, ஆக. 27— சென்னை துறைமுகப் பகுதி 52-வது வட்ட பொது உறுப்பினர்கள் கூட்டம் நாளை 28-ந்தேதி மாலை 6 மணிக்கு தாண்டவராய முதலி தெருவில் வட்ட அவைத் தலைவர் தலைமையில் நடைபெறுகிறது. தொகுதி செயலாளர் எம் வி ராமன், மண்ணடி கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் பங்கு கொள்ளும் இந்தக் கூட்டத்தில் அண்ணா பவள விழாவினை சிறப்பாக கொண்டாடுவது மற்றும் கழக வளர்ச்சிப் பணிகள் குறித்து ஆலோசிக்கப்படுகிறது.

வட்ட உறுப்பினர்கள், மன்ற மகளிர் அணியினர் அனைவரும் தவறாது கலந்து கொள்ளுமாறு வட்டச் செயலாளர் விகே கபூர் கேட்டுக்கொண்டுள்ளார்.

இளைஞர்கள் ஆர்வம் காட்டி

# ஓமியோபதி டாக்டர்களாக வரவேண்டும்

## எட்மண்ட் பேச்சு

சென்னை, ஆக. 27- ஓமியோபதியில் இளைஞர்கள் ஆர்வம் காட்டி ஓமியோபதி டாக்டர்களாக வரவேண்டும் என்று எட்மண்ட் கூறினார்.

தமிழ்நாடு ஓமியோபதி மருத்துவ கருத்தரங்கு நேற்று சென்னை கலைவாணர் அரங்கில் நடைபெற்றது. இக் கருத்தரங்கை மக்கள் நல் வாழ்வுத் துறை அமைச்சர் டாக்டர் அண்டே துவக்கி வைத்தார்.

கருத்தரங்கு நிறைவு விழாவில் கலந்துகொண்டு தமிழக அரசு சிறப்புப் பிரதிநிதி ஜி. ஆர். எட்மண்ட் பேசினார். ஓமியோபதி பற்றிய நூலையும் வெளியிட்டார்.

அப்போது அவர் கூறியதாவது:-

மருத்துவத் துறையில் எத்தனையோ முறைகள் உள்ளன. எத்தனைமுறைகள் இருந்தாலும் அத்தனைமுறைமருத்துவமும் மக்களின் நோய் நீக்கும் பணியைத்தான் செய்கின்றன.

மருத்துவ முறைகள் மாறுபட்டாலும் மருத்துவத்தின் குறிக்கோள் ஒன்று தான்.

ஓமியோபதி மருத்துவத் துறையில் இளைஞர்கள் ஆர்வம் காட்டவேண்டும் எம்.பி.பி எஸ், டாக்டர்கள் போல ஓமியோபதி டாக்டர்களும் வளரவேண்டும்.

எனக்கு இந்த மருத்துவ முறையில் மிகுந்த நம்பிக்கை உண்டு. இதனால் நல்ல பலன் ஏற்படுகிறது.

### தனி வாரியம்

இன்றைக்கு நமது இந்திய நாட்டில் ஓமியோபதிக்கு என்று மருத்துவக் கல்லூரிகள் செயல்படுகின்றன.

தமிழ்நாட்டிலும் மதுரைக்கு அடுத்த திருமங்கலத்தில் ஓமியோபதி மருத்துவக்கல்லூரி நடந்து கொண்டு வருகிறது.

கன்னியாகுமரியிலும் தனியார் இத்தகைய கல்லூரி ஒன்றை ஆரம்பித்து நடத்தி வருகிறார்.

மத்திய அரசு ஓமியோபதிக்காக ஒருதனிவாரியம் அமைத்து இருக்கிறது.

முதல்வர் புரட்சித் தலைவர் ஓமியோபதி மருத்துவ முறைக்கு நல்ல ஊக்கம் தருகிறார். ஆக்கம் தருகிறார். இத்துறை வளரவும் நடவடிக்கைகள் எடுத்துவருகிறார் என்பது அனைவருக்கும் தெரியும்,

ஓமியோபதி மருத்துவ முறையை அரசு மருத்துவ மனைகளில் குறிப்பிட்ட சில இடங்களில் புகுத்தி அத்துறையை வளர்க்க முதல்வர் ஈடுபாடுகொண்டுள்ளார்.

ஓமியோபதி மருத்துவத் துறைக்கு வேண்டிய வசதிகளை முதல்வர் புரட்சித் தலைவர் அனுமதியுடன் மத்திய அரசிடம் சொல்லி அதற்கான ஏற்பாடுகளை தமிழ்நாடு அரசின் சிறப்புப் பிரதிநிதி என்ற முறையில் செய்வேன்.

இவ்வாறு ஜி. ஆர். எட்மண்ட் பேசினார்.

எழும்பூர் தொகுதி

## கழக ஆலோசனைக் கூட்டம்

சென்னை, ஆக. 27— எழும்பூர் தொகுதி கழக ஆலோசனைக் கூட்டம் இன்று 27-ந்தேதி மாலை6 மணிக்கு எழும்பூர் ஹாரிஸ் ரோடு - (விவேக் லாட்ஜ்) குழந்தைகள் நல மருத்துவமனை எதிரில் எழும்பூர் தொகுதி அண்ணா பவள விழா ஆலோசனைக் கூட்டம் நடைபெறுகிறது கூட்டத்தில் சென்னை மாவட்ட கழக செயலாளர் ஜேப்பியார் எம். எல். சி. சென்னை மாவட்ட மன்றச் செயலாளர் இ. மதுசூதனன் எம். எல். சி. கு. க. செல்வம் எஸ். ஏ. ராஜபாண்டியன் ஆகியோர் கலந்துகொள்வர்.

வட்டக் கழக நிர்வாகிகள்-துணை மன்ற நிர்வாகிகள்- மகளிர் அணி- தொழிலாளர் அணி- இளைஞர் அணியினர் அனைவரும் தவறாது கலந்து கொள்ளுமாறு பகுதிச் செயலாளர் மா. சுமணி அறிவிக்கிறார்.

அலங்கா நல்லூர் ஒன்றியத்தில்

## அண்ணா பவள விழா

மதுரை, ஆக. 27 அலங்கா நல்லூர் ஒன்றியத்தில் கேட்டுக்கடை அருகே அண்ணா பவள விழா கொண்டாடப்பட்டது. மதுரை மாவட்ட பால்வளத் தலைவர் வெ. பாலகுரு தலைமையிலும் அலங்கா நல்லூர் ஒன்றிய செயலாளர் பிச்சையப்பன் முன்னிலையிலும் அலங்கா நல்லூர் ஒன்றிய எம். ஜி. ஆர். மன்ற செயலர் சேது என்ற அங்குசாமி வரவேற்புரையாற்ற அமைச்சர் யூசுப் கழக கொடி ஏற்றிவைத்து சிறப்புரையாற்றினார்.

அமைச்சருடன் அலங்காநல்லூர் சர்க்கரை ஆலை பொதுச் செயலாளர் ஜமாலுதின், எம். ஜி. ஆர். இளைஞர் அணியைச் சேர்ந்த கே. சாத்தையா, குலாம்முகம்மது, எஸ். என், நாகராஜ், டி. ஆறுமுகம், நகரசெயலாளர் கருப்பசாமி மற்றும் கழக தோழர்களும் கலந்து கொண்டனர்.

அலங்காநல்லூர் ஒன்றிய பாலமேட்டில் அண்ணா பவளவிழாவை முன்னிட்டு பல்வேறு இடங்களில் மதுரை மாவட்ட புறநகர் மாவட்ட அவைத் தலைவர் வெ. பாலகுரு தலைமையில் அலங்காநல்லூர் ஒன்றிய செயலாளர் பிச்சையப்பன் முன்னிலையில் பாலமேடு [illegible] வரவேற்புரையாற்ற அமைச்சர் யூசுப் கழகக் கொடியேற்றி சிறப்புரையாற்றினார்.

# இந்திய விமானக் கடத்தல் ஆசாமிகளுக்கு பாகிஸ்தானில் ஆயுதங்கள் வந்த மர்மம்!

புதுடெல்லி, ஆக. 27— இந்திய விமானத்தைக் கடத்திச் சென்ற ஆசாமிகளுக்கு பாகிஸ்தானில் துப்பாக்கி உள்ளிட்ட ஆயுதங்கள் அடங்கிய பாக்கெட் மர்மமாக வந்துள்ளது.

விமானக்கடத்தல்காரர்களை மடக்க பாகிஸ்தானின் உதவி சாதகமாக இல்லை எனபதும் தெரிய வந்துள்ளது.

சண்டிகாரிலிருந்து இந்திய விமானம் ஒன்று கடத்திச் செல்லப்பட்டது தெரிந்தத்தே.

சீக்கிய தீவிர வாதிகள் இந்த விமானத்தை லாகூருக்கும், பிறகு கராச்சிக்கும் கொண்டு போய்பிறகுதுபாயில் சரண் அடைந்து விட்டனர்.

பயணிகள் பத்திரமாக வந்து சேர்ந்தனர். கடத்தலுக்கு உட்பட்ட விமானமும் பத்திரமாக வந்து சேர்ந்து விட்டது.

இந்தவிமானக்கடத்தல்காரர்களுக்குபாகிஸ்தான் உதவி கிடைத்து இருக்கக் கூடும் என்று கருதப்படுகிறது.

விமானத்தைக்கடத்திய போது அந்தக் கடத்தல்காரர்களிடம் கத்திகளும் பெட்ரோல் குண்டுகளும், ஒரு காமிராவும் தான் இருந்தன.

இவைகளை அவர்கள் தலைப்பாகைக்குள் ஒளித்து வைத்திருந்தனர் என்று கருதப்படுகிறது,

கடத்தல் விமானம் லாகூரில் இறங்கிவிட்டு பிறகு புறப்பட்டபோது அவர்களிடம் திடீரென்று துப்பாக்கி இருந்தது. லாகூரில் அந்தக் கடத்தல்காரர்கட்கு மர்மமான முறையில் ஒரு ஆயுத பாக்கெட் தரப்பட்டது.

அதில் ஒரு துப்பாக்கியும் இருந்தது. இந்த ஆயுதப் பாக்கெட் வந்தபிறகு தான் அந்தக் கடத்தல்காரர்கள் மிகவும் தெம்பாக இருந்தனராம்.

அந்தப் பாக்கெட்டில் டைம்பாம், மற்றும் வெடி மருந்துகளும் இருந்ததாக கடத்தல்காரர்கள் கூறியதாக பயணிகள் தெரிவித்தனர்,

இது மட்டுமல்ல லாகூர் விமான நிலையத்தில் கடத்தல்காரர்கள் இஷ்டம்போல நடமாட அனுமதிக்கப்பட்டனர் என்றும் பயணிகள் கூறினர்.

# நலிந்தநிறுவனங்கட்கு மத்திய - மாநில அரசுகள் உதவி

## கழக எம். பி. வலியுறுத்தல்

புதுடெல்லி, ஆக. 27. நலிந்த நிறுவனங்கள் மற்றும் தொழிற்சாலைகள் மீண்டும் செம்மையாக செயல்பட மத்திய அரசும் மாநில அரசும் பொறுப்புடன் உதவி அளிக்க வேண்டும் என்று மாநிலங்களவையில் கழக உறுப்பினர் ராமகிருஷ்ணன் வலியுறுத்தினார்.

மாநிலங்களவையில் நலிவுற்ற நிறுவனங்களுக்கு நிதிஉதவி பற்றிய விவாதத்தில் கலந்து கொண்டு ராமகிருஷ்ணன் பேசுகையில் கூறியதாவது:-

நாட்டில் பல ஏகபோக தொழில் நிறுவனங்கள அளவுக்கு மிஞ்சிய லாபத்தில் செயல்படுகின்றன. நலிந்த நிறுவனங்கள் மேலும் நலிந்து கொண்டே போகின்றன.

அவற்றிற்கு மீண்டும் உயிரூட்ட நலிந்த நிறுவனங்களை லாபம் வரக்கூடிய ஏகபோக தொழில் நிறுவனங்களுடன் சேர்த்துவிட வேண்டும். இதன்மூலம் பெரிய தொழில்களின் ஏகபோகம் ஒழிக்கமுடியும்.

தவிர தனியார் கொள்ளை லாபம் அடிப்பதையும் தடுக்க முடியும். நலிந்த நிறுவனங்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது.

பன்னாட்டு தொழில் நிறுவனங்கள் பொறுப்பில் விட்டு விடலாம்.

இதன் மூலம் நலிந்த நிறுவனங்கள் மீண்டும் நல்ல முறையில் செயல்பட வாய்ப்பு ஏற்படும்.

தமிழகத்தில் மூடப்பட்டுள்ள பி அண்டு சி ஆலை மற்றும் புதுவை ரோடியர் ஆலை ஆகியவற்றை மீண்டும் திறக்கச் செய்து நடத்துவதற்கு மத்திய அரசு விரைந்து வழிவகை காண வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

தொழில் நிறுவனங்கள் சீரமைப்புறும் நிதி நிறுவனத்தை சென்னையில் அமைக்கவேண்டும்.

இவ்வாறு ராமகிருஷ்ணன் கூறினார்.

## மறுபரிசீலனை வேண்டும்

28 ஆயிரமாக இருந்த நலிந்த ஆலைகளின் எண்ணிக்கை இப்போது 60 ஆயிரமாக உயர்ந்து விட்டது.

ஏறைக்குறைய 3 ஆயிரத்து 200 கோடி ரூபாய் இந்த நிறுவனங்களுக்கு வங்கிகள் மூலம் நிதிஉதவி செய்யப்பட்டுள்ளது.

பலவங்கிகள் சில நிறுவனங்களுக்கு செய்த கடன் உதவியை ரத்து செய்துள்ளன. இந்த நிறுவனங்களுக்கு மத்ய, மாநிலங்கள செய்யும் உதவிகளால் பலன் பெறுபவர்கள் நிர்வாகத்தினரே. அந்த நிறுவனங்களில் வேலை பார்க்கும் தொழிலாளர்கள் அல்ல.

ஆகவே நலிந்த நிறுவனங்களுக்கு செய்யும் நிதி உதவி பற்றி மறுபரிசீலனை செய்ய வேண்டும்.

## பின்னி ஆலை

நலிவுற்ற நிறுவனங்களை ஏற்று நடத்தும் பொறுப்பைமத்திய அரசின் கட்டுப்பாடு மற்றும் மாநில அரசின் மேற்பார்வையோடு ஏகபோக தொழில் நிறுவனங்கள் அல்லது

## புதிய மைக்ராஸ்கோப்: ஜப்பான் கண்டுபிடிப்பு

டோக்கியோ, ஆக. 26- மயிரிழையிலும் நுண்ணிய பகுதியை துல்லியமாகப் படம் பிடித்துக் காட்டும் அதிசயமான எலக்டிரான் மைக்ராஸ்கோப் ஒன்றை ஜப்பான் நிறுவனம் உருவாக்கியுள்ளது வர்த்தகரீதியில் இந்த எலக்டிரான மைக்ராஸ்கோப் பயன்படும்.

ஒரு சென்டிமீட்டர் அளவைப் பத்து கோடியாக பங்கிட்டால், அதில் ஒரு பங்கை ஆங்ஸ்டிராம் என்கிறார்கள் அதைவிட நுணுக்கமானதையும் இந்த புதிய எலக்டிரான் மைக்ராஸ்கோப் துல்லியமாக படம்பிடித்து தருகிறது அதாவது பல்வேறு பொருள்களை அணு அளவிலும் படம் பிடிக்க முடிகிறது உருவமைலாத உலோகம் நுண்ணிய மண்பாண்டம், மற்றும் புதிய தொழிலியல் பொருள்களின் அமைப்புகள குறித்த ஆராய்ச்சிகள் நடத்த இந்த புதுமையான மைக்ராஸ்கோப் உதவியாக இருக்கும்என்று கருதப்படுகிறது.

# சென்னையில் 'சார்ட்டட்' விமானம் இறங்க வகைசெய்க

## நாடாளுமன்றத்தில் ஜக்கையன் வலியுறுத்தல்

புதுடெல்லி, ஆக. 27- சென்னைக்கு சார்ட்டட் விமானம் (தனி விமானம் வருகை தர ஆவன செய்யவேண்டுமென நாடாளுமன்றத்தில் கழக உறுப்பினர் ஜக்கையன் எம் பி ஒரு அவசர தீர்மானத்தின் மூலம் வற்புறுத்தினார் இது குறித்து ஜக்கையன் எம் பி பேசியதாவது:

சென்னை விமான நிலையம் பன்னாட்டு விமானம் வருகை தரும் ஒரு விமான நிலையமாகும் கோவா திருவனந்தபுரம் விமானநிலையங்களையும் விட நல்லவசதி பெற்ற விமான நிலையமாகும் வெளிநாடுகளில் இருந்துவரும் உல்லாசப் பயனிகளை கோவா, கோவளம், (கேரளா) இரண்டும் எந்த அளவுக்கு கவர்ந்து இழுக்கின்றதோ அதைவிட அதிகமாக, சென்னைக்கு அருகில் உள்ள மகாபலிபுரம் உல்லாசப் பயணிகளை கவர்கின்றது. உலகத்திலேயே இரண்டாவது பெரிய கடற்கரைசென்னை மாநகரத்தில்மட்டும் தான் உள்ளது. இருந்தபோதிலும், சென்னை நகரம் "சார்ட்டட்" விமானம் செல்லும் இந்திய வரைபடத்தில் இல்லை. ஆனால் கோவா, திருவனந்தபுரம் போன்ற இடங்கள் "சார்ட்டட் விமானம்" வருகை தர பரிந்துரை செய்யப்பட்டுள்ளது இந்த விஷயத்தில் தமிழக அரசின் நீண்டநாள் கோரிக்கையை உடனே நிறைவேற்றி சென்னைக்கு "சார்ட்டட் விமானம்" வருகைதர ஆவன செய்ய வேண்டுகிறேன்.

# நாடாளுமன்ற தேர்தலை தள்ளி போடமாட்டோம்

## பிரதமர் இந்திரா காந்தி அறிவிப்பு

ஜாம்ஷெட்பூர், ஆக. 27 இந்தியாவில் நாடாளுமன்ற தேர்தல்திட்டமிட்டபடிகுறிப்பிட்ட காலத்தில் நடைபெறும் என பிரதமர் இந்திரா காந்தி கூறினார்;

இந்தியாவில் அடுத்த ஆண்டு (1985) ஜனவரி மாதத்துடன் நாடாளுமன்ற உறுப்பினர்களின் பதவி காலம் முடிவடைகிறது. எனவே வருகிற ஜனவரி மாதம் நாடாளுமன்றத்திற்கு முறைப்படி தேர்தல் நடத்தவேண்டும்

தற்கிடையில் வருகிற நவம்பர் அல்லது டிசம்பர் மாதத்தில் தேர்தல நடத்தப்படலாம் என்று கூறப்பட்டது. நேற்று ஜாம்ஷெட்பூரில் நிருபர்களுக்கு பேட்டி அளித்த போது பிரதமர் இந்திரா காந்தி இதுபற்றி கூறியதாவது:-

இந்தியாவில் நாடாளுமன்ற தேர்தல் முறைப்படி குறிப்பிட்ட காலத்தில் நிச்சயம் நடைபெறும் அதில் எந்தவித மாற்றமும் இல்லை.

தேர்தலை நிச்சயம் தள்ளிபோட மாட்டோம்.

இவ்வாறு பிரதமர் இந்திரா காந்தி நிருபர்களிடம் கூறினார்.

# இருண்டு கிடந்த ஏழைகள் இல்லங்கட்கு ஒளிதந்தபுரட்சிதலைவர்

## மாநிலங்களவையில் கழக உறுப்பினர் ஹீராசந்த் பேச்சு

புதுடெல்லி ஆக 27. இருண்டு கிடந்த ஏழைகள் குடிசைகட்கு இலவச மின்சாரம் தந்து அவர்கள் இல்லங்களுக்கு ஒளி தந்த தலைவராக புரட்சித்தலைவர் விளங்குகிறார் என மாநிலங்களவையில் கழக உறுப்பினர் ஹீராசந்த் எம் பி. பேசினார்.

மாநிலங்களவையில் கிராமிய தொழிலாளர் நலநிதி மசோதா மீது கழக உறுப்பினர் ஹீராசந்த் எம் பி. பேசுகையில் கூறியதாவது:-

ஏழை, எளிய விவசாயிகள் வாழ்கின்ற தமிழகத்திலிருந்து நான் இங்கு வந்திருக்கிறேன். எங்கள அரசின் முக்கிய குறிக்கோள் கிராமங்கள வளர்ச்சியடைந்தால், கிராமமக்களின்வாழ்க்கை தரம் உயர்ந்தால் நாடு முன்னேறும்என்பதாகும். சமபத்தில சுதந்திர தினத்தன்று எங்கள் முதலமைச்சர் ஏழை, எளிய மக்களுக்கு அளித்த சலுகைகளைப் பற்றி கேளவிப்பட்டு இருப்பீர்கள என்கருதுகிறேன.

### ஒளிமயம் ஆக்குவோம்

ஏழ்மைக் கோட்டிற்கு கீழ் உள்ள விவசாயிக்கு இதுவரையில் 12 பைசா வீதம் மின்சாரம்கொடுக்கப்பட்டு வந்தது. இனி அவர்களுக்கு இலவசமின்சாரம் வழங்கப்படும் இருண்டு கிடந்த ஏழைகளின் இல்லங்கள் அனைத்திற்கும் இலவச மின்சாரம் அளிக்கப்படும் இதுவரைஅவர்கள் இரவில் உணவு அருந்த தெருவிளக்குக்கு வருகின்ற அவல நிலையை மாற்றி அவர்களின் இல்லங்கள ஒளிமயமாக ஆக்கப்படும். நிலமில்லாத ஏழை விவசாயிகளுக்கு நிலம், குடியிருப்பு, வீட்டுமனை பட்டா போன்ற எத்தனையோ புரட்சிகரமான திட்டங்களை எங்கள் தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்துள்ளார்.

### 20 அம்ச திட்டம்

பிரதமர் இந்திராவின் 20 அம்ச திட்டத்தினை எங்கள் முதலமைச்சர் எங்களின் அரசு மூலமாக எந்த அளவு சிறந்த முறையில் நிறைவேற்றிவருகிறார் என்பது தாங்கள் அறிந்ததே.

எங்கள்அரசுதன்னிறைவு திட்டம் என்ற திட்டம் ஒன்றினை நிறைவேற்றி கிராமங்களுக்கு அடிப்படைத் தேவைகளை பூர்த்தி செய்திருக்கிறது. இத்திட்டத்தால் ஆரம்பக் கல்வி, ஆரம்ப சுகாதாரம், பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீர், சாலை வசதி போன்ற அடிப்படைத்தேவைகளை பூர்த்திசெய்துஉள்ளோம். மத்திய அரசு இத்திட்டத்தை எல்லா மாநிலங்களும் நிறைவேற்ற வேண்டும் என்ற பரிந்துரையை மாநில அரசுகளுக்கு அனுப்ப வேண்டும் என இச்சந்தர்ப்பத்தில் கேட்டுக் கொள்கிறேன்.

### தமிழக திட்டங்கள்

ஆதிதிராவிட மக்கள் படும் தொல்லைகள் தாங்கள் அறியாதது அல்ல. எங்கள் அரசு ஆதிதிராவிட மக்களின் நலன் கருதி மயானங்களுக்கும் அதற்குப் போகின்ற பாதைவசதிகளும் அமைத்துத் தந்து உள்ளது. சென்ற ஆண்டு மத்திய அரசு என் கேள்வி ஒன்றுக்குப் பதில் அளிக்கையில்இதுபோன்ற திட்டம ஒன்று இந்திய துணைக்கண்டத்தில தமிழகத்தில மட்டும்தான் நிறைவேற்றியுள்ளது என பதில் தந்துள்ளார்கள். ஆகவே இது போன்ற சிறந்த திட்டங்களை நாட்டில் உள்ள எல்லா மாநிலங்களும் நிறைவேற்றிட வேண்டும் என மத்திய அரசு பரிந்துரை செய்ய வேண்டும் என கேட்டுக் கொள்கிறேன்.

தாம்ப அவர்கள் இம் மசோதா கொண்டு வந்த தன் நோக்கம் கிராமப்புற நலநிதி என்ற ஒன்றினை மத்திய அரசு நிறுவ வேண்டும் என்பது தான். அடிப்படையில் கிராம மக்களுக்கு நிறைய வசதிகள் செய்ய முடியும். மாநிலங்களின் நிதி நிலைமை குறைவாக இருப்பதால் இதுபோன்ற கிராமபுறப்நலநிதியினால் தான் மாநிலங்களுக்கும் அதன் மூலமாக கிராமப்புறத்தில் வாழும் ஏழை எளிய விவசாயிகளின்

4-ம் பத்தி பாக்க

7-ம் பத்தி தொடர்ச்சி

வாழ்வில் மலர்ச்சி ஏற்பட ஏதுவாக அமையும். இதில் கட்சி பாகுபாடின்றி ஆளும் கட்சி, எதிர்க்கட்சி என்ற கருத்து வேறுபாடில்லாமல இம் மசோதாவினை ஆதரிக்க வேண்டும் என கேட்டு இம்மசோதாவை ஆதரிக்கிறேன்.

இவ்வாறு ஹீராசந்த எம் பி பேசினார்.

# எஸ். டி. சர்மா: ஆந்திர மாநில புதிய கவர்னர்

புதுடெல்லி, ஆக. 27- ஆந்திர மாநில கவர்னராக எஸ். டி. சர்மா நியமிக்கப்பட்டுள்ளார்.

ஆந்திராவில் என்.டி. ராமாராவ் அமைச்சரவையை கவர்னர் ராம்லால் கலைத்துவிட்டு பாஸ்கரராவ் தலைமையில் புதிய அமைச்சரவையை நியமித்ததும் அதற்கு நாடு முழுவதும் கடும் எதிர்ப்பு கிளம்பியதும் தெரிந்ததே.

இதையடுத்து கவர்னர் பதவியை ராஜினாமா செய்துவிட்டு ராம்லால் குடும்பத்துடன் டெல்லிக்குப் போய்விட்டார்.

### ஜனாதிபதி அறிவிப்பு

இப்போதுஆந்திரமாநில புதிய கவர்னராக சங்கர் தயாள் சர்மா நியமிக்கப்பட்டு இருக்கிறார். இதை ஜனாதிபதி ஜைல் சிங் நேற்றிரவு அதிகாரபூர்வமாக அறிவித்தார்

ஜனாதிபதி மாளிகையில் இருந்து வெளியிடப்பட்ட இதற்கான அறிவிப்பில் "ஆந்திர மாநில கவர்னராக இருந்த ராம்லால் கொடுத்த ராஜினாமா கடிதம் ஜனாதிபதியால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆந்திர மாநில புதிய கவர்னராக டாக்டர் சங்கர்தயாள்சர்மா நியமிக்கப்பட்டு இருக்கிறார்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது.







Edited And Published by K RAVINDRAN on Behalf of Thangamani Publications And Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras - 600 029